POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6, TN. MS. C. P. P. 55    ANNA Leading Progressive Tamil Daily of the People

# மத்திய அமைச்சரவை மாற்றம்

Regd. No, TN - MS [C] 244 Phone: 426212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10} சென்னை 12-5-1986 திங்கள் :- வெளியீடு 13-5-1986 செவ்வாய் [இதழ 200

## பூட்டாசிங் உள்துறை அமைச்சரானார்

### பன்னிரெண்டு புதிய அமைச்சர்கள் நியமனம்- வெளிவிவகாரத்துறை அமைச்சர் பகத் நீக்கம்

புதுடெல்லி, மே 12 - மத்திய அமைச்சரவையில் 12 புதிய அமைச்சர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர் வெளிவிவகாரத் துறை அமைச்சர் பி. ஆர். பகத் பதவியில் இருந்து விடுவிக்கப்பட்டுள்ளார். பூட்டாசிங் உள்துறை அமைச்சராக நியமிக்கப்பட்டுள்ளார்.

மத்திய அமைச்சரவையை பிரதமர் ராஜீவ் காந்தி மாற்றி அமைத்துள்ளார்.

இதுவரை விவசாயத் துறைஅமைச்சராக இருந்த பூட்டாசிங் உள்துறை அமைச்சராகநியமிக்கப்பட்டுள்ளார்.

ஜம்மு காஷ்மீர் மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் முப்தி முகமதுசையத் முன்னாள் மக்கள்சபை சபாநாயகர் ஜி எஸ். தில்லான் ஆகியோர் மத்திய அமைச்சரவையில் காபினெட்அமைச்சர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

பீகாரைச் சேர்ந்த கே.கே. திவாரி கோவாவை சேர்ந்த எடுராடோ வெலிரோ மகாராஷ்டிராவை சேர்ந்த சரோஜ் கார்பரோட். பீகாரைச் சேர்ந்த கிருஷ்ண சாகி. அசாமைச் சோந்த சந்தோஷ்மோகன்தேவ் ஆகியோர் உத்திரப்பிரதேச முன்னாள் நிதியமைச்சா பிரமதத், மேற்குவங்க கவர்னர் உமாசங்கர் தீட்சித் மகள் ஷீலாதீட்சித், பீகாரைச் சேர்ந்த ராமநாத்யாதவ் காதவி ஆகியோர் அமைச்சர்களாக்கப்பட்டுள்ளனா.

பி.ஆர்.பகத்திடம் இருந்த வெளி விவகாரத் துறை வாத்தகத்துறை அமைச்சரான சிவசங்கரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

ராஜீவ்காந்தி புதிதாக நியமித்துள்ள 12 பேர்களில் ஜி.எஸ். தில்லானும் முகமதுசையதும் காபினெட் அமைச்சர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர். பிரேன்சிங் எத்தி துணை அமைச்சராக நியமிக்கப்பட்டுள்ளார்.

மற்ற 9 அமைச்சர்கள் ராஜாங்க அமைச்சர்களாக நியமிக்கப்பட்டுள்ளனா.

### பகத் நீக்கம்

வெளிவிவகாரத் துறை அமைச்சராக இருந்த பி.ஆர்.பகத் பதவியில் இருந்து விடுவிக்கப்பட்டுள்ளார்

### பதவி ஏற்பு

புதிதாக நியமிக்கப்பட்டுள்ள அமைச்சர்கள் இன்று காலை ஜனாதிபதி மாளிகையில் பதவி ஏற்றனர்.

புதிய அமைச்சர்களுக்கு ஜனாதிபதி ஜைல்சிங் பதவி பிரமாணம் செய்து வைத்தார்.

பதவி ஏற்பு நிகழ்ச்சியில் பிரதமர் ராஜீவ், மத்திய அமைச்சர்கள் மற்றும் பலர் கலந்து கொண்டனா.

### இலாகா விவரம்

பூட்டாசிங்- உள்துறை பி. சிவசங்கர் வெளி விவகாரம்- வர்த்தகம் ஜி.எஸ் தில்லான், விவசாயம், கிராம வளர்ச்சி

திமுப்முகமதுசையத்-சுற்றுலா,

எச்.கே.எல்.பகத்-உணவு சிவில் சப்ளை.

மற்ற காபினெட் அந்தஸ்துள்ள அமைச்சர்களின் இலாகாகள் மாற்றப்படவில்லை.

புதிதாக நியமிக்கப்பட்டுள்ள ராஜாங்க அமைச்சர்கள் இலாகாக்கள்விவரம் வருமாறு -

பிரமாதத் — வர்த்தகம்

ராமானத்யாதவ்- கிராம வளர்ச்சி, பி. கே, சத்வி- செலவினம், குலாம் நபி, ஆசாத் உள்துறை திருமதி ஷீலாதீட்சித்- நாடாளுமன்ற விவகாரம் சந்தோஷ மோகன்தேவ - சுற்றுலா திருமதி கிருஷ்ணசாகி கல்வி-கலாச்சாரம், கே.கே. திவாரி. பொதுத் துறை தொழில்கள் சரோஜ் காபாண்டே சுகாதாரம் ராடோவெலிரோ வெளிவிவகாரம், பிரேன்சிங் எட்டகி—நிர்வாகத்துறை,

பிரதமர் ராஜீவ் பதவி ஏற்ற 17 மாதங்களில் இதுவே முதல் பெரிய அமைச்சரவை மாற்றம் ஆகும்.

### அறிமுகம்

புதிதாக நியமிக்கப்பட்டுள்ள 12 அமைச்சர்களையும் மாநிலங்களவையில் பிரதமர் ராஜீவ்காந்தி உறுப்பினர்கட்கு அறிமுகம் செய்து வைத்தார்.

இந்தஅமைச்சரவை விஸ்தரிப்பை அடுத்து, மத்திய அமைச்சரவையின் மொத்த எண்ணிக்கை 68ஆகஉயர்ந்துள்ளது.

இந்த அமைச்சரவை விஸ்தரிப்பு மூலம் பஞ்சாப், அசாம், காஷ்மீர் ஆகிய மாநிலங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது.

அமைச்சரவை மாற்றம் பற்றி பிரதமர் ராஜீவ் நிருபர்களிடம கூறியதாவது:—

ஆந்திர மாநிலத்திற்கு மத்திய அமைச்சரவையில் உரிய நேரத்தில இடம் அளிக்கப்படும். அமைச்சரவையில் சில இடங்கள் உரிய காலத்தில் நிரப்பப்படும்.

பிரணாப்முகர்ஜி கட்சியில் இருந்து நீக்கப்பட்டதால் கட்சிக்கு எந்தவிதப் பாதிப்பும் இல்லை.

இவ்வாறுபிரதமர்ராஜீவ் கூறினார்,

புதிய அமைச்சர்கள் மாநிலங்களவைக்கு வந்தபோது உறுப்பினர்கள் மகிழ்ச்சியுடன் கைதட்டி வரவேற்றனர்.

உள்துறை அமைச்சர் பூட்டாசிங்

பதவி இழந்த பி. ஆர். பகத்



## பாளை. நாராயணன் மறைவு: முதல்வர்புரட்சித்தலைவர் இரங்கல்

சென்னை, மே. 12— கழக சட்டமன்ற உறுப்பினர் பாளை. நாராயணன் மாரடைப்பால் மரணம் அடைந்தார் அவரது மறைவுககு முதல்வர் புரட்சித் தலைவர் தனது ஆழ்நத துயரத்தை தெரிவித்துள்ளார்,

### புரட்சிதலைவர் அனுதாபம்

பாளை நாராயணன் மறைவு குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் விடுத்துள்ள அனுதாப செய்தி வருமாறு:-

தமிழகசட்டமன்ற உறுப்பினரும் எனது அருமை உடன் பிறப்புக்களில ஒருவருமான பாளை. நாராயணன் உடல் நலக் குறைவால் மரணம் அடைந்த செய்தி கேட்டு அதிர்ச்சியும், ஆழ்ந்த துயரமும அடைந்தேன்.

அண்மையில்தான் அருப்புக் கோட்டை சட்டமன்ற உறுப்பினர் திரு. பிச்சை அவர்களை பறி கொடுதது அந்த சோகம் ஆறாத நிலையில் பாளைநாராயணனின் மறைவு என்னை பெரிதும் துயரத்தில் ஆழ்த்திவிட்டு இருக்கிறது,

பாளை நாராயணன் தொடக்கம் முதல் அனைத்திந்திய அண்ணா தி. மு கழக பணிகளில் ஈடுபட்டு வந்த சிறந்த செயல்வீரர் அவரது மறைவு கழகத்துக்கு பெரிய இழப்பாகும். அவரை இழந்துவாடும் அவரது குடும்பத்தாருக்கும் உற்றார் உறவினருக்கும் என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவிததுக்கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறி இருக்கிறார்.

கழக சட்டமன்ற உறுப்பினர் பாளை நாராயணன் மறைவுககு சட்டசபையில இரங்கல் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு சபை ஒத்தி வைக்கப்பட்டது.

இன்று காலை 9 மணிக்கு சட்டசபை கூடியவுடன் சபாநாயகர் பி எச் பாண்டியன் உறுப்பினர் பாளை நாராயணன் மறைவுச் செய்தியை அறிவித்தார்.

இனிய பண்பும் நல்ல உள்ளமும் செயலாற்றல திறனும கொண்டபாளை நாராயணன் மாரடைப்பால்மரணமடைநதசெய்தி கேட்டுஇப்பேரவை ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது என்ற தீர்மானததை அவை முன்னவர் நிதியமைச்சர் டாக்டர் நாவலா முன்மொழிந்தார்.

அப்போது நிதியமைச்சர் நாவலர் பேசுகையில்கூறியதாவது:-

உறுப்பினர் பாளை எஸ். நாராயணன் நேற்று முன்னால் வரை சட்டமன்ற நிகழ்ச்சியில் கலந்துகொண்டு விட்டு பேசி பழகிவிட்டு நேற்று காலை தான் நெல்லை போய் சேர்ந்தார்.

திடீரென மாரடைப்பு ஏற்பட்டு பாளையங் கோட்டை மருத்துவமனையில் சேர்க்கப்படடு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது. சிகிச்சை பலன் அளிக்காமல் மரணமடைந்தார்.

அண்மையில் அருப்புக் கோட்டைதொகுதி உறுப்பினா பிச்சையின் மறைவினால் மீள்முடியாத துயரத்தில உள்ள நிலையில் இது மற்றொரு அதிர்ச்சியான தாங்க முடியாத இழப்பாகும்.

பாளை நாராயணனுக்கு வயது 54 தான். திராவிட இயக்கத்திலிருந்து கொள்கைக்காக பாடுபடுகிற நல்ல செயல் வீரராக திகழ்ந்தார். அனைத்திந்திய அண்ணா தி மு கழகம் துவங்கிய நேரத்திலிருந்து தீவிரமாக பணியாற்றி வந்தவா.

1984ல் நெல்லை தொகுதியில்போட்டியிட்டு வெற்றி பெற்றவர்.

1964 லிருந்து 69 வரை பாளையங்கோட்டை நகராட்சி உறுப்பினராகவும் 69லிருந்து 76வரை பாளையங்கோடடை நகராட்சி மன்றத் தலைவராக இருந்து அந்த மக்களுக்காக பணியாற்றி அந்தமக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றவர்.

கதர் வாரிய துணைத் தலைவராக சில ஆண்டு காலம் செயல்பட்டார், தொழில் முதலீட்டுக் கழக இயக்குனராகவும் அறநிலையத் துறை வட்டாரத் தலைவராகவும் இருந்து சிறப்பாக பணியாற்றியவர் இப்படி பல் வேறு துறைகளில் மக்களுக்காக சேவை செய்து தொகுதி மக்களின் குறைகளை போக்குவதில் கண்ணும் கருத்துமாக இருநதவா.

கழக கொள்கையில் பிடிப்புக் கொண்டவர் ஆரவாரமற்றவர். அமைதியாக எடுத்த காரியத்தை முடிப்பதில் வல்லவர். அவரது மறைவுஇந்த அவைக்கு பேரிழப்பாகும்.

அவரது மறைவு குறித்து இந்த அவை குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத தெரிவித்துக் கொள்கிறது.

இவ்வாறு நிதியமைச்சர் நாவலர் கூறினார்.

### இந்திரா காங்கிரஸ்

சட்டமன்ற எதிர்க் கட்சித் தலைவர் உ சுப்பிரமணியம் (இந்திரா காங்கிரஸ்) பேசுகையில் கூறியதாவது:-

சமீபத்தில் பிச்சையின் மறைவிலிருந்து மீள முடியாத நிலையில் மற்றொரு பேரிழப்பு நமக்கு ஏற்பட்டுள்ளது.

பாளை நாராயணன் கட்சி, ஜாதி பேதமின்றி உழைத்து வந்தார். என்ற செய்தியை தெரிவித்தனர்

அவரது இழப்பினால் வாடும் அவரது குடும்பத்திற்கும் அவா சார்ந்திருக்கிற அனைத்திந்திய அண்ணா தி. மு. கழத்திற்கும் எங்கள் கட்சியின் சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு உ. சுப்பிரமணியம் கூறினார்.

### தி. மு க.

தி.மு.க. உறுப்பினர் சு. பாலன் பேசுகையில் கூறியதாவது:—

இந்த கூட்டத் தொடரில் 2 உறுப்பினர்களை இழந்திருப்பது பேரதிர்ச்சியைத் தருகிறது.

பாளை நாராயணன் திராவிட இயக்கத்தில ஈடுபட்டு பொதுத் தொண்டு ஆற்றியவர்.

பாளை நகராட்சி உறுப்பினராகவும், தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்றால் எவ்வளவு சேவை செய்திருப்பார்என்பது தெரிகிறது

நல்ல தொண்டரை இழந்திருப்பது அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்திற்கு பேரிழபபு தான்.

அவரைப்போல் நாமும் மக்களுக்கு தொண்டாற்றுவோம்.

அவரது குடும்பத்திற்கும் அவர் சார்ந்திருக்கிற அனைத்திந்திய அண்ணா தி மு.கழகத்திற்கும்எங்கள் கட்சியின் சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இவ்வாறு சு.பாலன் கூறினார்.

மற்றும் ரமணி மார்க்சிஸ்ட்) உத்திராபதி (இந்திய கம்யூனிஸ்ட்) சம்சுல் ஆலம் (முஸ்லிம் லீக்) குமாரதாஸ்(ஜனதா)மூத்து ராமலிங்கம (பார்வர்டு பிளாக்தமிழரசன்(குடியரசு கட்சி) ஆகியோரும் வழிமொழிந்து பேசினர்.

இரங்கல் தீர்மானத்தை யொட்டி சபாநாயகர் பி எச். பாண்டியன் பேசுகையில் கூறியதாவது:

1972 ம்ஆண்டு புரட்சித் தலைவர் அனைத்திந்திய அண்ணா தி.மு,கழகத்தை துவக்கிய போது நெல்லை மாவட்டத்தில் அனைத்திந்திய அண்ணா தி மு. கழகத்தை வளர்த்து உருவாக்கபாடுபட்டவர்களில் அவரும் ஒருவர். அவருக்கு 2 முறை மாரடைப்பு ஏற்பட்டுள்ளது அதையும் மீறி பஸ்சில் பயணம் செய்திருக்கிறார். அப்போது அவருக்கு 3 வது முறை மாரடைப்பு ஏற்பட்டு இந்த மரணம் சம்பவித்தது.

இந்த நேரத்தில் உறுப்பினர்களுக்கு ஒன்றைத் தெரிவிததுக்கொள்கிறேன் உறுப்பினர்களுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டி இருப்பதால் சட்டமன்ற உறுப்பினர்கள்அனைவரும் தங்கள் உடல்நிலையை பரிசோதனை செய்து கொள்ளவேண்டும். இரவு நேரத்தில் மோட்டார்வாகனங்களில் அதிகமாக பயணம் செய்யக் கூடாது.

இவ்வாறு பி.எச்.பாண்டியன் கூறினார்.

இரங்கல் தீர்மானத்தை நிறைவேற்றும் வகையில் அனைவரும் எழுந்து நின்று மவுன அஞ்சலி செலுத்தினா.

பின்னர் சபை 9-27 மணிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

## காஷ்மீர் சட்டசபை கலைப்பு இல்லை: பிரதமர் அறிவிப்பு

புதுடெல்லி. மே 12— காஷ்மீர் சட்டசபை கலைக்கப்படமாட்டாது தற்போதுள்ள சட்டமன்றம் அதன் முழு காலத்திற்கும் இருக்குமென்றும் பிரதமர் ராஜீவ் கூறினார்.

மத்திய மந்திரிசபை விஸ்தரிப்புக்கு பின் பிரதமர் ராஜீவ் நிருபர்களிடம் பேசினார். அப்போது பிரதமர் காஷ்மீர் பிரச்சினை பற்றி குறிப்பிடுகையில் காஷ்மீர் சட்டசபை இடையில் கலைக்கப்படமாட்டாது. அதன் முழு காலம் வரை இருக்கும் என்று குறிப்பிட்டார்.

பரூக் அப்துல்லா வின் கோரிக்கைபற்றி நிருபாகள் குறிப்பிட்ட போது தேசிய மாநாட்டுகட்சி உறுப்பினர்கள் ராஜினாமா செய்தால் அந்த இடங்களில் இடைத் தேர்தல் நடைபெறுமென்றும் பிரதமர் கூறினார்.

### டிரைவர் கொலை இருவர் கைது

சென்னை, மே 12— கோடம்பாக்கம் காமராசர் காலனியைச் சேர்ந்த சுந்தரராஜன் (வயது-26) என்ற ஆட்டோ டிரைவர் 5ம் தேதியன்று சாராயக் கடை அருகில் நடந்த தகராறில் தாக்கப்பட்டார்.

படுகாயமடைந்த அவரை ரிக்ஷாவில் கொண்டு போய் அவரது இல்லத்தில் சேர்ந்தனர்.

அங்கு அவர் மரணமடைந்தார் இது குறித்து துணை கமிஷனர் வடிவேலு.உதவி கமிஷனர் நல்லம்மாள் நாயுடு ஆகியோரின் மேற்பார்வையில் இன்ஸ்பெக்டர் சுகுமாரன் ராஜு வயது 30 சந்திரன்வயது28 என்ற இருவரை கைது செய்து விசாரித்து வருகின்றனர்.

### சென்னை வெயில் 102டிகிரி

1½ மணி நிலவரம்

### நேபாளத்தில் இன்றுதேர்தல்

காட்மாண்ட், மே 12— நேபாளத்தில் தேசிய பஞ்சாயத்துக்கு 108 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க இன்று காலை வாக்குப் பதிவு துவங்கியது.

இந்தத் தேர்தலில் 87 லட்சம் பேர் வாக்களிக்கின்றனர்.

அதிகாலை முதலே வாக்கு சாவடிகள் முன் நீண்ட கியூ நின்றது.

நேபாளத்தில்தேசிய பஞ்சாயத்து 140 பேரை கொண்டதாகும். இதில் 112 பேர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 28 பேரை மன்னர் நியமிக்கிறார்.

இந்தத்தேர்தல்முடிவுகள் இன்னும் 12 தினங்களில் அறிவிக்கப்படுமென நேபாள தலைமை தேர்தல் கமிஷனர் சூர்யபிரசாத் ஷிரேஸ்தா தெரிவித்துள்ளார்.

## ஜெயவர்த்தனே பேச்சுக்கு கருத்து கூற பிரதமர் ராஜீவ்காந்தி மறுப்பு

புதுடெல்லி, மே 12— இலங்கைக்கு மேற்கு நாடுகள் ஆயுத உதவி செய்ய வேண்டும். என ஜெயவர்த்தனே பேசியுள்ளதற்கு கருத்து தெரிவிக்க பிரதமர் ராஜீவ் மறுத்து விட்டார்.

நிருபர்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கையில் பிரதமர் ராஜீவ் கூறியதாவது:-

இலங்கை ஜனாதிபதி என்ன பேசியுள்ளார் என்பது தெரியவில்லை. ஆகவே அது பற்றி எதுவும் கூற விரும்பவில்லை.

மத்திய அமைச்சர் சிதம்பரம் தலைமையில் தூதுக் குழுவினர் சென்று வந்துளளதால் நிலைமையில சிறிதளவுமுன்னேற்றம்ஏற்பட்டுள்ளது.

சுமுகத் தீர்வு கான வழி காணுவதில் ஈடுபட்டுள்ளனர்.

தென் ஆப்பிரிக்க மக்களுக்கு இந்தியா அளித்து வரும் ஆதரவு எனது சுற்றுப்பயணத்தின் மூலம் மேலும் வலுவடையும் என எதிர்பார்க்கிறேன்.

இவ்வாறுபிரதமர்ராஜீவ் கூறினார்.



### வழிமுறை

ஒரு செயலைத் தொடங்கு முன் நன்கு சிந்தித்து, வழி முறைகளைத் தெளிந்து தொடங்கவேண்டும்.

—பேரறிஞர் அண்ணா



### மாறுபாடு

நமக்கு மாறுபட்டு நிற்பவர்களுக்கும் உரிய மரியாதையைத் தர வேண்டும். அது தான் நல்லது.

—தந்தை பெரியார்

# சேதுசமுத்திரத் திட்டம்: கழக எம்.எல்.ஏக்கள் சட்டசபையில் கோரிக்கை

சென்னை, மே 12— சேதுசமுத்திரத் திட்டத்தை விரைவில் நிறைவேற்ற வேண்டும் என சட்டசபையில் கழக எம். எல். ஏக்கள் வலியுறுத்தினர்.

சட்டசபையில் சேதுசமுத்திரதிட்டம் பற்றி கழக உறுப்பினர் செமமலை கொண்டு வந்த தனிநபர் தீர்மானத்தின்மீது கழக உறுப்பினர் டாக்டர் சமரசம் பேசுகையில் கூறியதாவது:—

1860ம் ஆண்டு போடப்பட்ட இந்ததிட்டத்தை 125 ஆண்டுகளுக்குப் பிறகும் பேசிக் கொண்டு இருக்கிறோம் என்றால் எத்தகைய சிறப்புவாய்ந்த திட்டம் என்பது புரியும் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு இந்த திட்டம் உதவி புரியும்.

நமது நேச நாடுகளெல்லாம் மோச நாடுகளாகிக் கொண்டு இருக்கின்றன.

அப்துல்சமது (குறுக்கிட்டு): உறுப்பினர் சமரசத்தின் கருத்தோடு சமரச நாடுகளெல்லாம் சண்டை நாடுகளாக ஆகிக் கொண்டு இருக்கின்றன என்றும் கூறலாம் அல்லவா? (சபையில சிரிப்பு)

சமரசம் (தொடர்ந்து) நாட்டின் பாதுகாப்பு கருதி உடனடியாக இந்த திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும். இதனால் வறட்சி மாவட்டமான ராமநாதபுரம் வளம் பெறும்.

சேலம் இரும்பாலை திட்டம் கொண்டு வர வேண்டும் என்று அண்ணா அவர்கள் எழுச்சி நாள் கொண்டாடினார்.

அதுபோல சேதுசமுத்திர திட்டத்தை செயல்படுத்த நாம் எழுச்சி நாள் கூட கொண்டாடலாம் என்பேன.

சேதுசமுத்திர திட்டம் கொண்டுவரப்பட்டு செயலபடுத்தப்பட்டால் இலங்கையை சுற்றி இந்திய கப்பல்கள் இந்திய பகுதி வழியாகவே வரும் போகும். இதனால் பல லட்சக்கணக்கான ரூபாய் செலவு மிச்சப்படும்

இவ்வாறு சமரசம் கூறினார்.



வளர்மதி

சட்டசபையில் கழக உறுப்பினர் மயிலை வளர்மதி பேசுகையில் கூறியதாவது:

சேது சமுத்திர திட்டம் துவக்கினால் இலங்கையை சுற்றி 500 கிலோ மீட்டர் செல்லவேண்டியது குறையும்

இந்த திட்டத்தைப்பற்றி பேரறிஞர் அண்ணா பல முறை வற்புறுத்தி வந்திருக்கிறார்.

துணை குடியரசு தலைவராக இருக்கிற ஆர் வீ. நிதியமைச்சராக இருந்த போது ஒரு உறுதி மொழியை தந்தார். சேது சமுத்திரதிட்டம் நிறைவேற்ற 110 கோடி ரூபாய் செலவாகும், என்றார் அப்படி இருந்தும் ஏன் நிறைவேற்றவில்லை.

இந்த திட்டம் வறட்சி மாவட்டமான முகவை மாவட்டம் சிறப்பு பெற பெரிதும் உதவும்.

பிரிட்டிஷ் காலத்தில் போடப்பட்ட 9 கமிட்டிகளும் அதன் பின் போடப்பட்ட 3கமிட்டிகளும் பரிந்துரை செய்த இந்த திட்டத்தை ஏன் நிறைவேற்றவில்லை

வட மாநிலத்தில் பல்வேறு திட்டங்களுக்கு செலவிடும் மத்திய அரசு தமிழகத்தை புறக்கணிக்கிறதோ என்ற எண்ணம் ஏற்படுகிறது

கன்னியாகுமரிவரை கிழக்கு கடற்கரைசாலை அமைக்கும் பணியை மைய அரசே மேற்கொள்ளவேண்டும்.

கன்னியாகுமரியிலிருந்து கல்கத்தா வரை அகல ரயில்பாதை அமைக்கப்பட்டால் தான் நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடையும்.

இவ்வாறு வளர்மதி கூறினார.

# பாளை நாராயணன் மறைவு மேலவை இரங்கல்

சென்னை, மே 12— இன்று சட்ட மேலவை காலை 10. மணிக்கு தொடங்கியதும். திருநெல்வேலி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் பாளை. எஸ். நாராயணன் நேற்று மாலை மாரடைப்பால் காலமானது பற்றி மேலவைத் தலைவர் ம.பொ.சி. அறிவித்தார். அவரது குடும்பத்தாருக்கு ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவிக்கும் வகையில் அவையினர் 2நிமிட நேரம் எழுந்து நின்று மவுன அஞ்சலி செலுத்தினர்.

மறைந்த நாராயணன் குடும்பத்தாருக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் இன்றைய மேலவை நடவடிக்கைகளை ஒத்திவைப்பதாக அவர் அறிவித்தார. மீண்டும் நாளை காலை 10 மணிக்கு வழக்கம் போல் மேலவைக் கூடுமென்று ம,பொ.சி. அறிவித்தார்

### டி. எம். ஜானி கலைக்குழு

மே 17- சென்னை 15வது வட்டம்

23- சமயபுரம்

# மக்கள் ஆதரவு தர பூட்டோ புகழே காரணம்

## பெனாசிர் கருத்து

ராவல் பிண்டி, மே 12 மக்கள் என்னை ஆதரிகக காரணம், பூட்டோவின் செல்வாக்குதான் என பெனாசிர் பூட்டோ தெரிவித்துள்ளார.

பேட்டி ஒன்றில் பெனாசிர்பூட்டோ தெரிவித்திருப்பதாவது:-

அவாமிக் கட்சிக்கு மக்கள் ஆதரவு தரக் காரணம் எனது தந்தையான பூட்டோ மீதுமக்கள் வைத்துள்ள செல்வாக்கே காரணமாகும்.

பூட்டோ மக்களைத்தான் நம்பினார்.

அதைப் போலவே நானும் எனது பாதுகாப்பிற்கு கூட மக்களைத்தான் நம்பியுள்ளேன்.

கூட்டங்களில் பெனாசிர் வாழ்க என்று மக்கள் கோஷமிடுவதை நான் விரும்ப மாட்டேன்,

பூட்டோ புகழ் வாழ்க என மக்கள் கோஷமிடுவதையே நான் விரும்புகிறேன்.

பிரதமா பதவி வேண்டுமா?

பூட்டோவின் புகழ்வேண்டுமா என்று கேட்டால் பூட்டோவின் புகழ் தான் வேண்டும்என்றுகூறுவேன்.

இவ்வாறு பெனாசிர் கூறியுள்ளார்.

பெனாசிர் பூட்டோ மீது பாகிஸ்தானில் பஞ்சாப் மாநில மக்கள் பெரும் நம்பிக்கைக்கொண்டுள்ளனர்.

அவரும் லண்டனில் இருந்து வந்தபோதுநேரடியாக பஞ்சாப் மாநிலததின் லாகூருக்கு பறந்து வந்தார்

பூட்டோவின் ஆட்சிகாலத்தில சில இடங்களில் நடந்த அதிகார மீறல்களஎஇன்னமும், மக்கள்மறக்கவில்லை.

ஆனால் அந்த இடங்களிலும் கூட மக்கள் பெனாசிரை ஆதரிக்கிறார்கள்.

# நாட் குறிப்பு

### பெரம்பூர் 24-வது வட்டம்

பெரம்பூர் 24வது வட்டத்தில் எம்.ஜி.ஆர். தண்ணீர்பந்தலை எஸ். சாமிநாதன் தலைமையில் மதுசூதனன் எம்.எல்.சி.திறந்து வைத்தார். தொகுதி செயலாளர் ஜெயபால் மற்றும் கழகத்தவர்கள் கலந்து கொண்டனர்.

### திட்டக்குடி

நாள்-18ம் தேதி மாலை அண்ணாதிடல்.

தலைமை-டி, கே. துரை

வரவேற்பு- வி. பழனிமுத்து.

முன்னிலை- ஹீராசந்த் எம்.பி.

சிறப்புரை:- லட்சுமி முத்து, எஸ். தங்கராசு எம்.எல்.ஏ, இரா அரங்கசாமி, ஆ, கிருஷ்ணசாமி நகர தி. க தலைவர் டி. ஆர். சுந்தரம், இளங்கோவன்.

நன்றி. பிச்சைபிள்ளை. உத்தமராசன்.

### திண்டுக்கல்

தமிழ்நாடு அண்ணா கைக்கிள்ரிக்ஷா ஓட்டுநர் சங்கம் சார்பில் திண்டுக்கல்லில் அலுவலக திறப்பு விழா 14ந் தேதி மாலை நடைபெறுகிறது.

தலைமை எஸ், பாஸ்கரன்.

முன்னிலை: பாபு, சி. முத்து புரட்சிதாசன்.

வரவேற்பு, சி. சீனிவாசன் நகர் செயலாளர்

சங்கத் திறப்பு: வை. பெருமாள்

கொடியேற்றுபவர் என். நம்பிராஜன்

பெயர்ப்பலகை திறப்பு: வெ. மாயன் விழாவில் ந. குணசேகரன் மு. காதர்ஷா எம். பி. சட்ட மன்ற உறுப்பினர் பிரேம்குமார், எம்.ராமலிங்கம்.ஜெயபால் ஜி. நாகராஜ்வி.ஜெயராமன் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

நன்றியுரை:-மஜீத்

# டெல்லியில் சிறப்பு பிரதிநிதியாக மதுரை பட்டுராஜன் நியமனம்

சென்னை, மே 12— டெல்லி சிறப்பு பிரதிநிதியாக மதுரை பட்டுராஜன் நியமிக்கப்பட்டுள்ளார். இதற்கான உத்தரவை தமிழக அரசு நேற்று பிறப்பித்தது,

சிறப்பு பிரதிநிதியாக நியமிக்கப் பட்டிருக்கும் பட்டுராஜன் தனது துணைவியார் சரோஜினியுடன் முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்து ஆசி பெற்றார.

இந்த வார இறுதியில் அவர் பதவி ஏற்பார் என்று தெரிகிறது டெல்லிசிறப்பு பிரதிநிதியாக நியமிக்கப் பட்டிருக்கும் பட்டுராஜனுக்கு 46 வயதாகிறது. வழக்கறிஞரான இவர் கழகம் தொடங்கியது முதல் தீவிர பணியாற்றிவருபவர். 1982, 83ம் ஆண்டுகளில் மதுரை நகர மேயராக பணியாற்றியவர். இவரது மனைவி பெயர் சரோஜினி. இவர்களுக்கு 2 மகன்களும் ஒரு மகளும் உள்ளனர்.

பட்டுராஜன் தற்போது தனியாக எம். ஏ. பட்டப் படிப்பு படித்து வருகிறார். இந்த ஆண்டு எம். ஏ பரீட்சையும் எழுதுகிறார்.

கழகத் தொண்டர்கள் மீது தொடரப்பட்ட ஏராளமான வழக்குகளில் ஆஜரானவர்.

### காலிஸ்தான் ஆதரவு கோஷமிட மறுத்தவர் சுட்டுகொலை

அமிர்தசரஸ், மே 12— காலிஸ்தானத்துக்கு ஆதரவாக கோஷமிட மறுதத இளைஞர் ஒருவரை தீவிரவாதிகள் கும்பல் ஒன்று சுட்டுக்கொன்றுள்ளது

இந்த சம்பவம் மஜிதா அருகேயுள்ள கத்ரேகலான் என்ற இடத்தில் நடந்துள்ளது இந்த சம்பவத்தில் இறந்தவர் பெயர் அஜின் சிங் என்பதாகும்.

# பிரிவினை சக்திகளுக்கு இடம் தரக்கூடாது: ஜைல்சிங் கண்டிப்பு

சென்னை, மே 12— பிரிவினை சக்திகளுக்கு இடம் தரக்கூடாது என்று ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

பக்தவத்சலம் கல்வி அறக்கட்டளையின் வெள்ளி விழாவும், பக்தவத்சலத்தின் 89வது ஆண்டு பிறந்த தினவிழாவும் சென்னையில் கொண்டாடப்பட்டது இதில் கலந்து கொண்டு ஜனாதிபதி ஜைல்சிங் பேசினார்

இந்தியா. ஆங்கிலேயர்களிடம் அடிமைபபட்டுக்கிடந்த போது சில தீயசக்திகள் தலைதூக்கின’ நமது ஒற்றுமையான போராட்டங்களின் மூலமாக ஆங்கிலேயனை வெளியேற்றி விட்டோம் ஆனால் தீய சக்திகள் இன்னும் நமது நாட்டில் இருக்கின்றன. இவற்றை அகற்ற நாம் ஒற்றுமையாகப் பாடுபட வேண்டும் என்று ஜைல் சிங் கூறினார்.

சுதந்திரம் கிடைத்த தினத்தில் இருந்தே தீண்டாமைக் கொடுமையை அகற்ற நாம் பாடு பட்டு வருகிறோம் நமது நாடு மீண்டும் துண்டாடப்பட்டு விடக்கூடாது என்று நாம் கவனமாக நடந்து கொள்கிறோம்.

நாட்டில் ஊழல். கடத்தல் கள்ளச்சந்தை போன்ற தீய நிலைகள் பெருகிவிட்டன பல இடங்களில் நியாய விலைக் கடைகள் இருப்பதைத தான் கண்டதாக கூறிய அவர் அப்படியானால் அநியாய விலை கடைகளும் நாட்டில் இருக்கின்றன என்று தானே அர்த்தம் என்றார்

அததகைய நிலை நமது நாட்டில் இருப்பது நல்லது தானா? ஏற்றத் தாழ்வுகளை நீக்க வேண்டும் என்றார்.

ஒதுக்கீடுகள் மூலமாக அரிஜன மக்களுக்குப் பல நன்மைகளை அரசு செய்து வருகிறது எனினும் நகர்ப் புறங்களில் உள்ள துப்புரவாளர்களின் குழந்தைகள் போன்ற சமுதாயத்தின் நலிந்தபிரிவினர் முன்னுக்கு வர முயற்சிகள் மேற கொள்ளப்பட வேண்டும்.

நாட்டில் நிலவும் தீய சக்திகளை அகற்றி நாட்டை நல்ல பாதையில் வழி நடத்திச்செல்லும் பணியில் ஆசிரியர் சமுதாயமும் ஒத்துழைக்க வேண்டும்.

### முன்னேற்றம் தடைபடுகிறது

ஜாதி, மதம், பிராந்திய மனப்போக்கு மக்களிடையே காணப்படுகிறது இத்தகைய நிலைகளினால் நாட்டை முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்லும் முயற்சி தடைபடுகிறது.

யாரோ செய்த தவறு காரணமாக ஒரு மனிதன் வாழ்நாள் முழுவதும் அடிமையாக இருப்பது கொடுமையானது. இத்தகைய கொத்தடிமை முறையை ஒழிக்க அரசு பல முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது இந்த கொத்தடிமை முறை முழுவதுமாக ஒழிக்கப்பட வேண்டும்.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் பேசினார்.

# பஞ்சாப் மாநிலத்தில் ஏழு சீக்கிய தீவிரவாதிகள் கைது

பாடியாலா, மே 12— பஞ்சாப் மாநிலத்தில் ஏழு சீக்கிய தீவிரவாதிகளை போலீசார் கைது செய்துள்ளனர்.

பஞ்சாபில் சமீபகாலமாக சீக்கிய தீவிரவாதிகள் அட்டூழியம் பெருகி வருவது தெரிந்ததே. கொலை. கொள்ளை போன்ற சம்பவங்களிலும் அவர்கள் ஈடுபட்டு வருகின்றனர்.

பயங்கரவாத செயலில் ஈடுபட்ட ஏழு சீக்கிய தீவிரவாதிகளை போலீசார் கைது செய்துள்ளனர். பாடியாலா மாவட்டத்தில் இந்த கைது நடந்துள்ளது.

இந்த கைது சம்பவம் பற்றி நிருபர்களிடம் தெரிவித்த பாடியாலா மாவட்ட தலைமை போலீஸ் அதிகாரி புல்லர் பயங்கரவாத செயலில் ஈடுபட்ட தீவ்ரவாதிகளிடமிருந்து கார், மோட்டார் சைக்கிள். ஸ்கூட்டர் துப்பாக்கிபோன்றபொருட்களும் கைப்பற்ற பட்டதாக கூறினார்

இந்தக்கும்பலைசசேர்ந்த சிலர் இன்னும் தலைமறைவாகஇருப்பதாகவும் அவர்களையும் விரைவில் கைது செய்வோம் என்றும் அவர் கூறினார்.

### பர்னாலாவுக்கு எம்.பி.க்கள் ஆதரவு

பொற்கோவிலுக்குள் இருந்துஅட்டூழியம் புரிந்து வந்த தீவ்ரவாதிகளை அடக்க பர்னாலா மேற்கொண்ட நடவடிக்கைகளுக்குஇந்திய கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட், பார்வர்டு பிளாக, ஜனதா உள்ளிட்ட பல எம பிக்கள் தங்கள் ஆதரவை தெரிவித்துள்ளனா.

பின்னா இவர்கள் நிருபர்களிடம் பேசுகையில் பொற்கோவிலுக்குள் இருந்து கொண்டு காலிஸ்தான் வேண்டுமென்று கேட்பது நியாயமறறது. இது போன்ற தேச விரோத சக்திகளை எந்த அரசும் அனுமதிகக முடியாது என்றும அவர்கள் கூறினர்

### பதன்கோட்டில் இருவர் கைது

எல்லைபாதுகாப்புபடையினருடன் மோதிய தீவிரவாதிகள் இருவரை பதன்கோட அருகே போலீசார் கைது செய்துள்ளனர்.

# கைத்தறிக்கு தொடர்ந்து 60 நாட்கள் தள்ளுபடி

## ஆலடி அருணா எம். பி. வலியுறுத்தல்

புதுடெல்லி மே 12— கைத்தறித் துணிககு தொடர்ந்து 60 நாட்கள் தள்ளுபடி அளிக்க வேண்டுமென்று மாநிலங்கள்வையில் ஆலடி அருணா கோரினார்.

மாநிலங்கள் அவையில் நடைபெற்ற நிதிமசோதா விவாதத்தில். கழக மாநிலங்கள் அவை குழுதுணைத் தலைவர் ஆலடி. அருணா பேசியதாவது:

தொழில் வளர்ச்சி ஏற்படவும், கிராமங்களில் வேலை வாய்ப்பு அதிகரிக்கவும், எளியோர் சிநதிடும் ஒவ்வொரு கண்ணீர் துளியையும் துடைத்திடவேண்டும் என்ற இலட்சியத்தினை அமல் செய்யவும் அக்கறையுடன் சில நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன. எனவே இந்த நிதி மசோதாவை ஆதரிக்கிறேன்.

### 7-வது ஐந்தாண்டு திட்டம்

ஏழாவது திட்டத்தின் முதல் ஆண்டில் இருக்கிறோம் பொதுத்துறைக்காக ஏழாவது திட்டத்தில் ரூபாய் 1,80,000 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இவற்றில சுமார் ரூபாய்90 000 கோடி மாநிலங்களுக்கு பகிர்ந்துஅளிக்கப்படுகிறது தமிழகத்திற்கு மத்தியஅரசு ரூபாய் 5750 கோடி தர இசைந்திருப்பதற்காக. பிரதமரையும் நிதி அமைச்சரையும் பாராட்டுகிறேன் ஆனால் மாநிலங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகை நீங்களாக, மத்திய அரசின் பொறுப்பில் உள்ள ரூபாய் 90,000 கோடியில் தமிழ்நாட்டிற்கு நியாயமான பங்கு கிடைக்கவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன் தமிழகத்தின் தேவையின் அடிப்படையில் புதிய தொழில்கள் துவக்கவும், இருக்கிற தொழில்களை விரிவு படுத்தவும் ரூபாய் 9,000 கோடி ஒதுக்கியிருக்க வேண்டும் ஆனால் ரூபாய் 3,000 கோடிதான் செலவு செய்ய வகை செய்யப்பட்டிருக்கிறது. இது தமிழகத்திறகு இழைக்கப்பட்ட அநீதியாகும்.

ஆறாவது ஐந்தாண்டுதிட்டத்திலும் தமிழகத்திற்கு நியாயமான அளவு பணம் ஒதுக்கப்படவில்லை 1977 முதல் 1986வரை அதாவது ஒன்பது ஆண்டுகளில் மத்திய அரசு தமிழகத்தில் சுமார் ரூபாய் 1600 கோடி மட்டும் முதலீடு செய்திருக்கிறது. இது மிகவும் குறைந்த தொகையாகும்

### அனுமதி தாரீர்

1977ஆம ஆண்டு முதல் 1986ம ஆண்டு வரை புதிய தொழில்கள் துவக்கிட தமிழக அரசு பரிந்துரைத்த 819 உரிமங்களில் மத்திய அரசு 468 உரிமங்களுக்கு மட்டுமே அனுமதி அளித்தது. மீதி உரிமங்களை மறுத்து விட்டது மீதமுள்ள உரிமங்கள் ஆண்டுக்கணக்காக மத்திய அரசின் கிடப்பில் உள்ளன.

தொழில் இல்லாத மாவட்டங்களில் மட்டுமே தொழில்கள் துவக்கிட சலுகை அளிப்பது என்ற மத்திய அரசின் தவறான கொள்கையை, தமிழ்நாடு மராட்டியம, போன்ற மாநிலங்கள் எதிர்த்துள்ளன இந்த கொள்கை பற்றி மீண்டும் பரிசீலிப்பதாக அரசு சார்பில் உறுதி அளிக்கப்பட்டாலும் மத்திய அரசு இந்த கொள்கையை கைவிட்டு; ஒன்றியப் பகுதியை ஒரு யூனிட்டாக எடுத்து கொள்கை வகுக்க முன் வரவில்லை— காலம் கடத்துகிறது

தமிழ்நாட்டில் மேலும் சில சாக்கரை ஆலைகளை நிறுவிட வாய்ப்புள்ளது. இது அரசுக்கு வருமானம் மட்டுமல்ல, விவசாயிகளுக்குப் பெருந் துணையாகும். சர்க்கரை ஆலை மட்டுமே விவசாயிகளுககுபெருமளவு துணை செய்யும் தொழிலாகும் எனவே தமிழக அரசு 30 ஆலைகளை அமைத்திட திட்டமிட்டுள்ளது. இதற்கு இன்னும் மத்திய அரசு அனுமதி அளிக்கவில்லை

### பாளையம் சிமெண்ட்ஆலை

இது போன்று மதுரை மாவட்டத்தில் பாளையத்தில் சுமார் ரூபாய் 48 கோடியில் ஒரு சிமெண்டு ஆலை நிறுவிட தமிழ்நாடு சிமெண்டு வாரியத்தின் சார்பில், தமிழக அரசு விண்ணபித்துள்ளது. இதற்கும் மத்திய அரசு இன்னும் ஒப்புதல் அளிக்கவில்லை

கைத்தறி துணிக்காக கொடுத்து வந்த ரிபேட் காலத்தை குறைத்திருப்பது வருந்தத்தக்கது வருடத்திற்கு அறுபது நாட்கள் ரிபேட் கொடுக்கப்பட்டுவந்தது. இதனால் ஏற்படும் செலவை மத்திய அரசும் மாநில அரசும் சரி சமமாக ஏற்றுக் கொண்டன இந்தரிபேட் காலத்தை 60 தினங்களிலிருந்து 45தினங்களாக 1985-86 முதல் மத்திய அரசு குறைத்தது.

வரும் நிதியாண்டிலிருந்து 30 தினங்களதான் ரிபேட் அளிக்கப்படும் என்று மத்திய அரசு அறிவித்திருப்பது பெரிய அதிர்ச்சியாகும்.

இந்த நடவடிக்கை லட்சக்கணக்கான நெசவாளர குடும்பங்களை பாதிக்கும் கைத்தறி தொழிலையே கெடுத்து விடும் ரிபேட் காலங்களில் தான் கைத்தறி துணி விற்பனையாகிறது அதன் கையிருப்பு விற்பனையாவதே ரிபேட் கொள்கையால் தான்

நெசவாளர்கள் ரிபேட் தினங்களை 90 நாட்களாக உயர்த்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். நீங்களோ கொடுத்து வந்த சலுகையை குறைத்துக் கொண்டு இருக்கிறீர்கள். எனவே வழக்கம் போல் 60 தினங்கள் ரிபேட் கொடுக்க வேண்டுகிறேன்.

இவ்வாறு ஆலடி அருணா பேசினார்.

### ஹெக்டே வீடு திரும்பினார்

பெங்களூர். மே 12— கர்நாடக முதல்வர் ஹெக்டே மருத்துவமனையிலிருந்து இன்று வீடு திரும்பினார்

கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ணஹெக்டே கடந்த பல தினங்களாக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைபெற்றார் புனித ஜான் மருத்துவ கல்லூரி மருத்துவமனையில் சிகிச்சை பெற்ற அவர் இன்றுகாலை தனது இல்லததிற்கு திரும்பினார்.

ஹெக்டே தற்போது உற்சாகத்துடன் இருப்பதாகவும் தனது அலுவலக காரியாலயே சென்றதாகவும் அலுவலக வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

# பாக். படைகுவிப்பு: அமெரிக்க நிபுணர்கள் பார்வையிட்டனர்

ஜம்மு, மே. 12— இந்திய எல்லை பகுதிகளில் குவிக்கப்பட்டுள்ள பாகிஸ்தான் படைகளை அமெரிக்க ராணுவ நிபுணர்கள் பார்வையிட்டனர்.

பாகிஸ்தான் இந்திய எல்லைப் பகுதியில ஏராளமான படைகளை குவித்து வைத்துள்ளது.

அமெரிக்க ராணுவ நிபுணர்கள் 7 பேர் பாகிஸ்தானில் சுற்றுப் பயணம் செய்து வருகிறார்கள்.

இவர்கள் எல்லைப் பகுதிகளில் உள்ள ராணுவ முகாம்களையும் முசாபரா பட்டுமனி ஆகியஇடங்களில் உள்ள விமானப்படை விமான நிலையங்களையும் பார்வையிட்டனர்.

அமெரிக்க ராணுவ நிபுணர்கள் பாகிஸ்தான் ராணுவ அதிகாரிகளுக்கு பல்வேறு ஆலோசனைகளையும் கூறியதாகத் தெரிகிறது.

# ஈழத்தமிழர்கள் மீது குண்டு வீசும் இங்கிலாந்து விமானிகள்

லண்டன், மே 12- ஈழத் தமிழர்கள் மீது ஹெலிகாப்டர் மூலம் குண்டுவீச இங்கிலாந்து விமானிகளை ஜெயவர்த்தனே பயன்படுத்துவதாக தெரியவந்துள்ளது.

தனி ஈழம் கோருவோரை அடியோடு ஒழித்துக் கட்டப்போவதாக இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே கூறியிருப்பது தெரிந்ததே.

இதற்கு இங்கிலாந்து அமெரிக்கா போன்ற நாடுகள் உதவ வேண்டும் என்றும் ஜெயவர்த்தனே பகிரங்கமாக வேண்டுகோள் விடுத்துள்ளார்.

ஈழத்தமிழர்கள் வசிக்கும் பகுதிகளில் ஹெலிகாப்டர்கள் மூலம் குண்டு வீச ஜெயவர்த்தனே இங்கிலாந்து மற்றும் தென் ஆப்பிரிக்க விமானிகளை பயன்படுத்துவதாக தெரிகிறது.

யாழ்ப்பாணம், மற்றும் திரிகோணமலை பகுதிகளில் 3 ஹெலிகாப்டர்கள் மூலம் குண்டு வீசப்பட்டு வருகிறது.

இதில் இரண்டு ஹெலிகாப்டர்களை இங்கிலாந்தைச் சேர்ந்த விமானிகள் ஓட்டிச் செல்லுகிறார்கள்.

மற்றொரு ஹெலிகாப்டரை தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த விமானி ஓட்டி சென்று குண்டு வீசுவதாக தெரியவந்துள்ளது.

இங்கிலாந்தைச் சேர்ந்த முன்னாள் ராணுவத்தினர் சிலரும் தமிழர் வீடுகளில் சோதனை நடத்த ஈடுபடுத்தப்படுவதாக தெரியவந்துள்ளது.

இங்கிலாந்து நாட்டில் உள்ள தனியார் நிறுவனம் மூலம் தமிழர்கள் மீது தாக்குதல் நடத்தவும், சிங்கள ராணுவத்தினருக்கு பயிற்சி அளிக்கவும் இலங்கை ஆட்களை பெற்று வருவதாக கூறப்படுகிறது.

## இலங்கைத்தூதர்

இதற்கிடையில் இந்தியாவில் உள்ள இலங்கைத் தூதர் திலக்ரத்னே கொழும்பு சென்று ஆலோசனை நடத்திவிட்டு டெல்லி திரும்பியுள்ளார்.

இலங்கைப் பிரச்சினை குறித்து தமிழக அரசின் ஆலோசனையை மத்திய அமைச்சர் சிதம்பரமும், ரமேஷ் பண்டாரியும் பெறக்கூடும் எனவும் கூறப்படுகிறது.

# புதுகோட்டை பால்வளத் தலைவர் பதவியேற்பு

புதுக்கோட்டை, மே 12- புதுகோட்டை மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் ஒன்றியப்பெருந்தலைவராக ஆலங்குடி ஆர். நடேசன் 8ம் தேதி காலை பதவியேற்றார். எஸ்.வி.எஸ். சிவகாமி சேர்வை ஆர்.எம்.பழனியப்பன்.டி.ஜெயராஜ். அப்துல் மஜீத்.எம். வேலுச்சாமி. தொண்டமான் ஆலங்குடி ராமசாமி, தனபால் சிக்கப்பட்டிசோமு. நிர்வாக இயக்குநர் ப. சுப்பிரமணியம் உதவி மேலாளர் டாக்டர் எம். இலக்குமி நாராயணன் ஆகியோர் உடனிருந்தனர்.

# கழகதோழர் வேணுவிடம் அமைச்சர்கள் நலம்விசாரிப்பு

சென்னை, மே 12- உடல் நலக் கோளாறு காரணமாக அரசு பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு உடல்நலம் தேறிவரும் கள்ளக்குறிச்சி சி. வேணுவை அமைச்சர்கள் பொன்னையன் அண்டே புரட்சித்தலைவர் அவர்களின்நேர்முக உதவியாளர் பிச்சாண்டி, சட்டமன்ற உறுப்பினர் கலிதீர்த்தான் ஆகியோர் நேரில் சென்று நலம் விசாரித்தனர். அமைச்சர் ப.உ.ச, தொலைபேசி மூலம் உடல்நலம் விசாரித்தார்.

# புதுவை அரசு ஊழியர் வீட்டுச்சலுகை

புதுவை, மே 12- புதுவை மாநிலம் காரைக்காலில் உள்ள 2000 அரசு ஊழியர்களுக்கு புதுவை அரசு 30-4-86 முதல் முதன் முதலாக வீட்டு வாடகை அலவன்ஸ் வழங்கிட மாநில முதல்வர் பரூக் உத்தரவிட்டுள்ளார்.

ஊழியர்களின் அடிப்படை சம்பளத்தில் ஏழரை சதவீதம் அலவன்சாக கிடைக்கும்.

இச்சலுகையால் காரைக்காலைச் சுற்றி 8 கி.மீ தூரம் வரை வசிக்கும் அரசு ஊழியர்கள் பயனடைவார்கள்.

# ஆப்பிரிக்க நாடுகளில் 14-ந் தேதிமுதல் பிரதமர் ராஜீவ் சுற்றுப்பயணம்

புதுடில்லி, மே. 12- ஆப்பிரிக்க நாடுகளில் 6 நாள் சுற்றுப்பயணம் செய்வதற்காக பிரதமர் ராஜீவ் காந்தி வரும் 14-ம் தேதி புதனன்று புறப்பட்டுச் செல்கிறார்.

தென் ஆப்பிரிக்காவில் தாண்டவமாடும் நிறவெறி கொள்கையை அமைதியான வழியில் அடியோடு அகற்ற காமன் வெல்த்நாட்டு தலைவர்கள் தயாரிக்கும் அறிக்கை இறுதி கட்டத்தை அடைந்துள்ளது.

இந்த அறிக்கைக்கு இறுதி வடிவம் கொடுக்க இந்தியா ஆஸ்திரேலியா நைஜீரியா. கனடா, இங்கிலாந்து, பார்படாஸ், தான்சானியா ஆகிய நாட்டுப் பிரதிநிதிகள் அடங்கிய குழு அடுத்தவாரம் தென் ஆப்பிரிக்காவில் சுற்றுப்பயணம் செய்ய இருக்கிறது.

## ராஜீவ் பயணம்

தென் ஆப்பிரிக்காவின் சுதந்திரத்துக்கு ஆதரவு அளிக்கும் ஆப்பிரிக்க நாட்டு தலைவர்களோடு பேச்சு நடத்துவதற்காக பிரதமர்ராஜீவ் காந்தி வருகிற புதன்கிழமை புறப்பட்டுச்செல்கிறார்.

ஜாம்பியா, ஜிம்பாம்வே அங்கோலா. தான்சானியா. ஆகிய நாடுகளில் பிரதமர் 6 நாட்கள் சுற்றுப் பயணம் செய்து, தென்ஆப்பிரிக்கா பிரச்சினை நமிபியா பிரச்சினைபற்றி அந்த நாட்டு தலைவர்களுடன் முக்கிய பேச்சு நடத்துவார்.

அமைச்சர்கள், அதிகாரிகள் உடன் செல்கின்றனர்.

## அமைச்சர்கள்

டெல்லியில் இருந்து புதன்கிழமை அதிகாலை புறப்படும் பிரதமருடன் அவருடைய மனைவி சோனியா காந்தி மற்றும்

## ஜாம்பியா

பிரதமர் முதலில் ஜாம்பியா தலைநகர் லூசாகா செல்கிறார் ஜனாதிபதி கென்னத் கவுண்டாவைச் சந்திக்கிறார்.

16ம்தேதி அங்கோலா சென்று 2 நாட்கள் பேச்சு நடத்துகிறார், 18ம் தேதி தான்சானியா போய்ச் சேருகிறார். அங்குவிவசாய பல்கலைக் கழகம் ஒன்று இந்தியா சார்பில் தொடங்கப்படுகிறது.

ஆப்பிரிக்க நாடுகளுக்குஇந்தியா விவசாயதுறைஅளிக்கும் ஒத்துழைப்புக்கு இந்த பல்கலைக்கழகம் ஒருசின்னமாக இருக்கும்.

பிரதமர் 20ம்தேதி இந்தியா திரும்புகிறார்.

# மகளிர் மன்றம் திறப்புவிழா

சென்னை, மே. 12- சென்னை8வது வட்டத்தில் மகளிர் மன்றத் திறப்பு விழா நடைபெற்றது. மகளிர் பிரிவு செயலாளர் புஷ்பா தலைமையில் மதுசூதனன் எம். எல். சி. மன்றத்தை திறந்து வைத்தார்.

# சிவஜெயந்தி விழாகலவரம்: 7 பேர் சாவு

பம்பாய், மே 12- மராட்டிய மாநிலம் நாசிக், பான்வல் முதலிய இடங்களில் நடந்த சிவஜெயந்தி திருவிழாவில் கலவரம் மூண்டது. கூட்டத்தினரை கலைக்க போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர் அதில் 5 பேர் உயிரிழந்தனர். 2 பேர் கத்திக்குத்துக்கு பலியானார்கள் பலர் காயம் அடைந்தனர்.

மகாராஷ்டிர மாநிலத்தில் சிவஜெயந்தி விழா கொண்டாடப்படுகிறது. திருவிழாவை பயன்படுத்தி சில சமூக விரோதிகள் வன்முறை சம்பவங்களில் ஈடுபட்டனர் இதனால் கோஷ்டிப் பூசல் ஏற்பட்டது.

நாசிக், நாந்த், பான்வெல், முதலிய பகுதிகளில் கலவரம் மூண்டது வன்முறை சம்பவங்கள் நடக்காமல் இருப்பதற்கு போலீசார் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

வன்முறை கூட்டத்தினரை கலைக்க போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர்.

இதில் 5 பேர் உயிரிழந்தனர். பலர் காயம் அடைந்தனர் கத்திக்குத்து சம்பவங்களும் நடந்தன.

இதில் 2பேர் கத்திக்குத்துக்கு பலியானார்கள். பலர் காயம் அடைந்ததாகக்கூறப்படுகிறது சிலரின் நிலைமை கவலைக்கிடம் என்று ஒரு அதிகாரி கூறினார்.

# தமிழக போலீஸ் சாதனை: கழக எம்.எல்.ஏ. பெருமிதம்

சென்னை, மே 12- தமிழக போலீஸ் இந்தியாவிலேயே சிறந்தமுறையில் பணியாற்றுகிறது என்று சட்டசபையில் தண்டராம்பட்டு வஜ்ரவேலு பெருமிதத்துடன் கூறினார்.

சட்டசபையில் போலீஸ் மானியக் கோரிக்கை மீதான விவாதத்தில் பங்கேற்று தண்டராம்பட்டு வஜ்ரவேலு பேசியதாவது:

பன்னெடுங் காலமாகத் திருப்பத்தூரிலும், தர்மபுரி மாவட்டத்திலும் நக்சலைட்டுகளின் தொல்லை கள்மக்கள தாங்கமுடியாத அளவிற்கு இருந்தது. கட்சி மாச்சரியம் அற்ற பொது மககளெல்லாம் இரவு முழுவதும் தூங்க முடியாது இருந்த சூழ்நிலை இருந்த காலமெல்லாம் போய் இப்பொழுது எந்தக் கட்சிக்காரர்களாக இருந்தாலும் நம்மைக் காக்கும் கடவுள் என்று நினைத்து புரட்சித்தலைவருடைய படத்தை வைத்து ஒவ்வொருவருடைய வீட்டிலேயும் வடார்காடு மாவட்டம், தர்மபுரிமாவட்டம்ஆகிய மாவட்டங்களில் உள்ள மக்களெல்லாம் காவல் தெய்வம் என்று வணங்குகிறார்கள் எங்கள் பகுதியில் நக்சலைட்டுகளை ஒழித்து, மக்களைக் காத்த புரட்சித்தலைவர் அவர்களுடைய காவல் துறையை இந்த அவையின் மூலம் நான் பாராட்டியே ஆக வேண்டும்.

## போலீஸ் சாதனை

அது மட்டுமல்ல, இந்த ஆண்டில் சென்னையைப் பொறுத்தவரையில் பெரிய அளவில் வெள்ளம்வந்தது அதனால்பொதுமக்களெல்லாம் தத்தளித்துக் கொண்டிருந்த நேரத்தில் நம்முடைய தமிழகத்துக்காவல துறையைச் சேர்ந்த நண்பர்கள் உரிய நேரத்தில் அவர்களுக்கு உதவக்கூடிய வாய்ப்பைப் பெற்றார்கள். கீழ் பகுதியிலே, தாழ்வான பகுதியிலே இருந்தவர்களைப் படகுகளின் மூலமாக மேல்பக்கம் கொண்டு வந்து அவர்களுக்கு உரிய பாதுகாப்பைக் கொடுத்து, தண்ணீர் வடிகின்ற வரையில், தங்கள் உயிரைக் கூட மதிக்காத வண்ணம் நம்முடைய காவல் துறைக் கமிஷனர் தேவாரம் தலைமையில் சென்னையிலே உரிய பாதுகாப்பைக் கொடுத்தார். ஏழை எளிய மக்கள் வெள்ளத்தில் சிக்காதவண்ணம், அந்தமக்களுடைய உயிருக்குப் பாதுகாப்பு கொடுத்த நம்முடைய காவல் துறையை நாம் பாராட்டியாக வேண்டும்.

நம்முடைய காவல்துறையைப்பொறுத்த வரையில் உலகத்திலே இன்றைக்கு நல்ல மரியாதை இருக்கிறது, இந்தியாவைப் பொறுத்தவரையில் டெல்லியிலே உள்ள உச்சநீதிமன்றத்தை பாதுகாக்கின்ற பொறுப்பையே தமிழ்நாட்டுக் காவல் துறையைச் சார்ந்த காவலர்கள் ஏற்றிருக்கிறார்கள் என்கின்ற பொழுது இந்தியாவில தலை சிறந்த காவல் துறையாக இந்தத் தமிழக மாநில காவல் துறை இருக்கிறது.

காந்தி சொன்னார் தீண்டாமை ஒழிய வேண்டுமென்று ஆனால் இன்றைய காந்தி இரண்டாம் காந்தி, எங்கள் காந்தி புரட்சித்தலைவர் அவர்கள் தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்ற அடிப்படையில் 22 மாவட்டங்களில் ஒவ்வொரு மாவட்டத்திலும், ஒரு இன்ஸ்பெக்டர் ஒரு துணை இன்ஸ்பெக்டர், 2 ஹெட் கான்ஸ்டபிள், 4 கான்ஸ்டபிள் ஆகியவர்களை வைத்துள்ளனர் மற்ற இனத்தவர்கள் ஹரிஜன மக்களைத் துன்புறுத்தக் கூடாது அப்படி துன்புறுத்தினால் பாதுகாக்க வேண்டும் என்ற உணர்வோடு எங்கள் காந்தியாக இருக்கின்ற புரட்சித்தலைவர் தம்முடைய ஆட்சியில் ஏற்படுத்தியிருக்கிறார்கள்

## மக்கள் தோழர்கள்

காவல் துறையினரைப் பொறுத்தவரையில் எப்போதுமே அவர்கள் மக்களின் தோழர்களாகத் தான் இருக்கிறார்கள் ஆனால் ரவுடிகளுக்குத் தோழனாக இருக்கமுடியாது, ரவுடிகளை ஒழிக்க வேண்டும். அந்த வகையில் சமூக நீதியை நிலைநாட்ட அவர்களுக்கு... (குறுக்கீடு) எனவே அந்த அளவுக்கு இன்றைக்குக் காவல் துறையைச்சேர்ந்த நண்பர்கள் நல்லமுறையில் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அன்றாடப் பத்திரிகையைப் பார்க்கிற போது ..(குறுக்கீடு) ஆபாச சுவரொட்டிகள் வெளியிடுவது போன்ற பல காரியங்கள் இன்றைக்கு நடப்பதை நாம் பார்த்துக் கொண்டு இருக்கிறோம்.

ஆனால் இவற்றைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்று சொன்னால் இவை யெல்லாம் சிவில் மேட்டர்ஸ் ஆகவே கோர்ட்டில்பார்த்து கொள்ளுங்கள் என்று சொல்லி விடுகிறார்கள், அப்படிக் கோர்ட்டுக்குப் போனால் 5 ஆண்டு காலம் ஆகிவிடுகிறது அதன் காரணத்தால் தவறுகள் செய்ய காரணமாக அது அமைகிறது இவற்றை எல்லாம் இ.பி.சி 292 (ஏ)-ன் கீழ் கொண்டு வந்து தண்டிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்

எனது தொகுதியில் தண்டராம்பட்டில் தீயணைப்பு நிலையம் வேண்டுமென்று சென்ற முறை கூட நான் பேசியிருக்கிறேன். எனது பகுதி மலைவாழ் மக்கள் வாழ்கிற பகுதி. எனவே அங்கே தீயணைப்பு நிலையம் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்

இவ்வாறு வஜ்ரவேலு பேசினார்.

# பிளாஸ்டிக் தொழில்: தமிழகம் சாதனை

சென்னை, மே12- பிளாஸ்டிக் தொழில் பற்றி பயிற்சி தருவதில் சென்னையிலுள்ள தொழிற்சாலை சாதனை புரிந்துள்ளது

சென்னை கிண்டியில் உள்ள பிளாஸ்டிக் எஞ்சினீயரிங் மற்றும் இயந்திரக் கருவிகள் பற்றிய மத்திய கழகத்தில் தேர்ச்சி பெற்று சென்ற தொழில் நுணுக்க நிபுணர்களில் 15சதவிகிதம் பேர் தொழில் அதிபர்களாக ஆகியிருக்கிறார்கள் என்று தமிழக கல்வி அமைச்சர் சி அரங்கநாயகம் கூறினார்.

இந்தக் கழகத்தின் மாணவர்கள் வருடாந்திர தினத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில், பிளாஸ்டிக் தொழிற்சாலைகளுக்கும் பிளாஸ்டிக் தொழில் நிபுணர்களுக்கும் இந்தக் கழகம் ஆற்றி வருகின்ற சேவையை அவர் பாராட்டினார்

பிளாஸ்டிக தொழிலில் ஏற்பட்டுள்ள பெரும் வாய்ப்புகள் பற்றி குறிப்பிடுகையில் 1990-ம் ஆண்டு வாக்கில இந்தத் தொழிலுக்கு வேண்டிய தொழில நிபுணர்களின் எண்ணிக்கை 3லட்சமாக இருக்கும் என்று அமைச்சர் தெரிவித்தார்.

ஏழாவது திட்ட காலத்தில் நாட்டில் பிளாஸ்டிக் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை7,250லிருந்து 20 ஆயிரமாக உயரும். 1985-86ம் ஆண்டில் இந்தக் கழகத்தில் பயிற்சி பெறும் தொழில் நிபுணர்களின் எண்ணிக்கை 200 ஆக அதாவது இருமடங்காக உயர்ந்துள்ளது இந்தக் கழகத்தில் இதுவரை6,210 பேர் பயிற்சி பெற்று இருக்கிறார்கள். விழாவின் போது பயிற்சியாளர்களுக்கு பரிசுகளை அமைச்சர் வழங்கினார்.

விழாவிற்குத் தலைமை வகித்த இந்தக்கழகத்தின் தலைவர் வி ஆர். தீனதயாளு பேசுகையில், இந்தக் கழகத்தில் பயிற்சி பெற்றுச் செல்லும் தொழில் நுபுணர்கள் நாட்டில் என்ஜினீயரிங் பொருட்கள் சிறந்த தரத்தில் உற்பத்தியாவதைப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினார். ஆரம்பத்தில் இந்தக் கழகத்தின் டைரக்டர் டாக்டர் ஐ எஸ் பரத்வாஜ் அனைவரையும் வரவேற்றார். மாணவர்கள் கமிட்டி கூட்டுச் செயலாளர் ராகேஷ் சிங் நன்றி கூறினார்.

# சீக்கிய பொற்கோவில் முன்பு கண்ணீர் புகை குண்டு வீச்சு

அமிர்தசரஸ், மே 12- அமிர்தசரஸ் பொற்கோவில் முன்பு இரு சீக்கிய கோஷ்டிகளுக்கு இடையேபெரும்மோதல ஏற்படாமல் தடுக்க போலீசார் கண்ணீர் புகை குண்டுகளை வீசினர்.

அமிர்தசரஸில் உள்ள பொற்கோவில் உள்ளே நுழைய சீக்கியர்கள் ஒரு பிரிவினர் முயன்றனர். இதை தடுக்க மற்றொரு பிரிவினர் முயன்றனர்.

ஒரு கோஷ்டியினரை எதிர்த்து மற்றொரு கோஷ்டியினர் கறுப்புக் கொடியும் காட்ட முயன்றனர்.

இதையடுத்து அங்கு பெரும் கலவரம் ஏற்படும் சூழ்நிலை ஏற்பட்டது,

இதைத் தடுக்க போலீசார் கண்ணீர்புகை குண்டுகளை வீசினர். அதன்பிறகே கூட்டம் கலைந்தது.

## ஆதரவு இல்லை

ஐக்கிய அகாலிதளக் கட்சியும் சீக்கிய மாணவர் அமைப்பும் சாலை மறிப்பு போராட்டத்திற்கு அழைப்பு விடுத்திருந்தன. ஆனால் எந்த இடத்திலும் அதற்கு ஆதரவு காணப்படவில்லை,

பஞ்சாப் முழுவதும் பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

## பாதல்

பஞ்சாப் முதல்வர் பர்னாலா, பொற்கோவிலுக்குள் போலீசாரை அனுப்பியதற்காக மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றும், முதல்வர் பதவி உட்பட அனைத்து பதவிகளில் இருந்தும் விலக வேண்டும். என்றும் பாதல தெரிவித்துள்ளார்.

## பர்னாலா பேட்டி

முதல்வர் பர்னாலா நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

பயங்கரவாதிகளை அகற்றுவதற்காகவே பொற்கோவிலுக்குள் போலீசாரை அனுப்ப நேர்ந்தது,

இது பற்றி நான் அகாலிதலத் என்ற அமைப்பின் விசாரணைக்கு உட்படவும் தயாராக உள்ளேன்

இவ்வாறு பர்னாலா தெரிவித்துள்ளார்.

# ராயபுரம் மாநகராட்சி குடியிருப்பு: அரசுபரிசீலனை

சென்னை, மே. 12- ராயபுரம் தொகுதியில் மாநகராட்சியால் கட்டப்பட்ட வாடகை குடியிருப்புகளை சொந்தமாக்கித் தர வேண்டுமென்று புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர் மறுமலர்ச்சி மன்ற சார்பில் ஒரு கோரிக்கை அரசுக்கு வந்திருக்கிறது.

இது அரசின் பரிசீலனையிலிருக்கிறது என்று அமைச்சர் ப.உ.ச. சட்டப்பேரவையில் அறிவித்தார்.

ராயபுரம் தொகுதியில் மாநகராட்சி குடியிருப்புகளில் வசிப்பவர்களுக்கு வாடகை ரூபாய் 15 ல் இருந்து ரூபாய் 60 ஆக உயர்த்தியது குறித்து பொன்னுரங்கம் ஒரு கவன ஈர்ப்பு தீர்மானம் கொண்டு வந்திருந்தார்

இதற்கு பதிலளித்து அமைச்சர் ப. உ. ச. கூறும்போது 'இருபது ஆண்டுகளாக தொடர்ந்து 15 ரூபாயாக இருந்தது இப்போது ரூபாய் 60 ஆகியுள்ளது மற்ற இடங்களைவிட இது குறைவு தான் என்று கூறினார்.

# வங்காள தேசத்தில் நிமிடத்திற்கு நிமிடம் மாறும் தேர்தல் முடிவு

டாக்கா. மே 12- வங்கதேசத்தில் அறிவிக்கப்படும் தேர்தல் முடிவுகள் அடிக்கடி மாற்றி அறிவிக்கப்படுகிறது

வங்க தேச தேர்தல்முடிவுகள் அறிவிக்கப்பட்டு வருகின்றன

இதில் எர்ஷாத்கட்சியான ஜாதீய கட்சிக்கு முடிவுகள் அறிவிக்கப்பட்ட 264 இடங்களில் 132 இடங்கள் கிடைத்துள்ளன.

அவாமி கட்சிக்கு 70 இடங்கள் கிடைத்துள்ளன

தேர்தல் முடிவுகள் அரசின பொறுப்பிலுள்ள டெலிவிஷன மற்றும் வானொலி மூலம் அறிவிக்கப்படுகிறது

ஆனால அவ்வாறு அறிவிக்கப்படும் முடிவுகள் தற்காலிகமானவை என்று அறிவிக்கிறார்கள்.

அரசாங்க கெசட்டில் அறிவிப்பு வந்தால்தான் தேர்தல் வெற்றி உறுதியாம்

அடிக்கடி தேர்தல் முடிவுகளை மாற்றியும் அறிவித்து வருகிறார்கள

ஒரு முறை அவாமிக் கட்சிக்கு 55 இடங்கள் கிடைத்துள்ளதாக அறிவித்தார்கள் ஆனால் சிறிது நேரத்திற்கு பின் 53 இடங்களிலதான் வெற்றி பெற்றதாக கூறினார்கள்

36 தொகுதிகளில் மறு தேர்தல் நடைபெறும் என அறிவிக்கப்பட்டுள்ளது

இதற்கிடையில் இந்தத் தேர்தலை ஒப்புக்கொள்ள மாட்டோம் மறு தேர்தல நடத்த வேண்டும் என் அசினா கோரியுள்ளார்.

வங்க தேசத்தில் பொது அர்த்தால் நடத்தவும் அவர் கேட்டுக் கொண்டுள்ளார்

# பள்ளிபாளையம் ஊராட்சி ஒன்றிய கூட்டம்

ஈரோடு. மே. 12- சேலம் மாவட்டம்பள்ளிபாளையம் ஊராட்சி ஒன்றியக் குழுவின் கூட்டம் ஒன்றிய அலுவலகத்தில் நடைபெற்றது ஒன்றிய தலைவர் ப. துரைசாமி கலந்து கொண்டார்.

இக் கூட்டத்தில் மதுரை மாநகரில் உலகத் தமிழ்ச்சங்கம் நிறுவி, தமிழ் மக்களின் சிறப்பை உலகறியச் செய்ய நடவடிக்கை மேற்கொண்டமைக்கு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு பாராட்டுதலையும் நன்றியையும் தெரிவிக்கும் தீர்மானமும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

# சிவகாசி பகுதி: 3 நாட்களாக பலத்த மழை

விருதுநகர், மே 12- காமராஜர் மாவட்டம் சிவகாசி, திருத்தங்கல் மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் கடந்த மூன்று நாட்களாக பலத்த மழை பெய்துள்ளது.

கோடை வெயில் கொளுத்தும் நேரத்தில வரப்பிரசாதமாக ஆங்காங்கே சில இடங்களில் கோடை மழை பெய்து வருகிறது.

காமராஜர் மாவட்டம் சிவகாசி அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் வழக்கமாக வெயில் அதிகமாக இருக்கும். இந்த ஆண்டும் வெயில் அதிகமாக இருந்தது குடி தண்ணீர் பிரச்னையும் கோடையில் இங்கு ஏற்படும்.

ஆனால் இந்த ஆண்டு இதைத் தீர்க்கும் பொருட்டு கடந்த மூன்று தினங்களாக இந்தப் பகுதிகளில் பலத்தகாற்று இடி, மின்னலுடன் கூடிய மழை பெய்தது. இதனால பல மரங்கள் வேரோடு சாய்ந்தன

குளம், குட்டைகளில் நீர் நிரம்பியுள்ளது இதனால் இந்தப் பகுதியில் இந்த ஆண்டு குடி தண்ணீர் பிரச்சினை ஏற்படாது.

# விருதுநகர் பகுதியில் மரங்கள் வெட்டப்பட்டதா?

சென்னை, மே 12- காமராசர் மாவட்டம் விருதுநகர் அருப்புக்கோட்டை சாலையில் பல ரூபாய் 2கோடி மதிப்புள்ள பச்சை புளிய மரங்கள் வெட்டப்பட்டதாக தாமரைக்கனி கவன ஈர்ப்புத் தீர்மானம் கொண்டுவந்தார்.

இதற்கு பதில் அளித்து அமைச்சர் முத்துசாமி பேசுகையில் மொத்தம் 18 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள மரங்கள் தான் வெட்டப்பட்டிருக்கிறது என்றார் இதன்பிறகு தாமரைக்கனி 2 கோடி ரூபாய் மதிப்புள்ள மரங்கள் வெட்டப்பட்டதற்கான ஆதாரங்களான புகைப்படங்களை அமைச்சரிடம் கொடுத்தார். அதிகாரிகள் தவறான தகவல் தந்திருப்பதாகவும் தாமரைக்கனி கூறினார்

அதன் பிறகு அமைச்சர் முத்துசாமி கூறியதாவது. முன்கூட்டியே இந்தத் தகவலைத் தந்திருந்தால் நடவடிக்கைகள் எடுத்திருக்கலாம் இந்தப் புகைப் படங்களையும் பார்த்து, வாய்ப்பிருந்தால் நேரடியாகவும் பார்க்கிறேன் அதிகாரிகள் தவறு செய்திருந்தால் [illegible] நடவடிக்கை எடுக்கப்படும் [illegible] கூறினார்.

## செப்டம்பரில் இந்திய-சீன பேச்சு வார்த்தை

புதுடெல்லி, மே. 12— இந்திய-சீன எல்லைத் தகராறு குறித்து இரு நாடுகளுக்கும் இடையே பேச்சுவார்த்தை சீன தலைநகரான பெய்ஜிங்கில் செப்டம்பர் மாதம் நடைபெறுகிறது.



## சூரிய அடுப்பு மூலம் சத்துணவு சமையல்

சென்னை, மே 12— சட்டசபையில் கழக உறுப்பினர் சைதைதுரைசாமி கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் சவுந்தரராசன் கூறியதாவது:—

மதுரை மாவட்டம் திருப்பரங்குன்றம் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த 10 மையங்களில் கடந்த ஆண்டு செப்டம்பர் மாதம் 15-ந் தேதி முதல் சத்துணவு கூடங்களில் சூரிய அடுப்பு மூலம் சமைக்கும் முறை செயல்பட்டு வருகிறது. இத்திட்டம் பரீட்சார்த்தமான முறையில் இந்த பத்துமையங்களில் நடத்தப்படுகிறது. சில ஆய்வுகள் செய்யப்பட்டு வருகின்றன.

இந்த ஆய்வின் அடிப்படையில் எல்லா இடங்களிலும் இதை அமைப்பது பற்றி பரிசீலிக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் கூறினார்.

# கழக சட்டமன்ற உறுப்பினர் பாளை. நாராயணன் மறைவு

சென்னை, மே 12— கழக சட்டமன்ற உறுப்பினர் பாளை நாராயணன் மறைவு குறித்து ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

நெல்லை தொகுதியிலிருந்து கழக சார்பில் சட்ட மன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டவர் பாளை. நாராயணன்.

தமிழ்நாடு சட்டசபை கூட்டத்தில் கலந்துவிட்டு நேற்றுக் காலை அவர் நெல்லை சென்றார். வண்ணாரபேட்டையிலுள்ள அவரது இல்லத்திற்கு சென்றதும் நேற்று காலை 8-30 மணிக்கு மாரடைப்பு ஏற்பட்டது.

அதன் பின்னர் அவரை தனியார் மருத்துவமனையில் சேர்த்தனர். அங்கு சிகிச்சை பலனளிக்காததால் பாளை நாராயணன் நேற்று பிற்பகல் 3.15 மணிக்கு மரணமடைந்தார்.

உடனடியாக அவரது உடல் வீட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. பாளை நாராயணன் வீட்டுக்கு அமைச்சர் யூசுப் சென்று இறுதி மரியாதை செலுத்தினார். பாளை. நாராயணன் உடலுக்கு நெல்லை மாவட்டச் செயலாளர் கருப்பசாமி பாண்டியன் கடம்பூர் ஜனார்த்தனம். எம்.பி.தனுஷ்கோடி ஆதித்தன்எம்.பி. நெல்லை நகர்மன்ற தலைவர் ஆதம், பாளை நகரசபை தலைவர் சீதாராமன். பாளையங்கோட்டை யூனியன் தலைவர் சண்முக வேல் ஆகியோர் இறுதி மரியாதை செலுத்தினர்.

### ஆர்.எம்.வீ. அஞ்சலி

பாளை நாராயணனின் மறைவு செய்தி கேட்டதும் அமைச்சர் ஆர். எம். வீ. நெல்லை விரைந்தார். பாளை நாராயணன் உடலுக்கு மலர்மாலை வைத்து அஞ்சலி செலுத்தினார்.

பாளை நாராயணன் இறுதி ஊர்வலம் பிற்பகல் புறப்பட்டது. மாலை 4 மணி அளவில் தாமிரபரணி ஆற்றங்கரையில் உடல் தகனம் நடந்தது.

ஏராளமான கழகத் தோழர்களும், பிரமுகர்களும் பாளை நாராயணனுக்கு கண்ணீர் அஞ்சலி செலுத்தினர்.

### பொதுச் செயலாளர் அஞ்சலி

பாளை. நாராயணன் மறைவு செய்தி கேட்டதும் கழகப் பொதுச்செயலாளர் எஸ். இராகவானந்தம் இன்று காலை விமானம் மூலம் மதுரைசென்று பின் அங்கிருந்து கார் மூலம் நெல்லை சென்றார்.

பாளை. நாராயணன் உடலுக்கு கழக சார்பில் மலர்மாலை வைத்து அஞ்சலி செலுத்தினார்.

## பேரூராட்சிதலைவர் மக்கள் குறைகள் கேட்டார்

அரூர், மே 12— அரூர் பேரூராட்சிதலைவர் கே. கருப்பாக்கவுண்டர் அரூர் நகரில் உள்ள 14 வார்டுகளிலும் நேரில் சென்றுமக்கள்குறைகளைக் கேட்டார். குடிநீர், சுகாதாரம் மின்சாரம், மற்றும் சாலைபுதுபித்தல் போன்ற கோரிக்கையைக் கேட்டு உடன் நடவடிக்கை எடுக்கும்படி அதிகாரிகளிடம் கேட்டுக் கொண்டார்

அவருடன் எம்.ஜி.ஆர். இளைஞர் அணிச் செயலாளர் பாரதி, பேரூராட்சி செயல்அலுவலர் பொன்னுசாமி, சுகாதார அதிகாரி நெடுமாறன் ஆகியோரும் சென்றனர்.

## மருத்துவ மனைகட்கு டயாலிசிஸ் கருவிகள்

சென்னை, மே 12— பல்வேறு மருத்துவமனைகட்கும் டயாலிசிஸ் கருவிகள் படிப்படியாக அளிக்கப்படும் என அமைச்சர் அண்டே தெரிவித்துள்ளார்

தமிழகத்தில் சென்னை பொது மருத்துவமனை ஸ்டான்லி, கீழ்ப்பாக்கம். ராயப்பேட்டை, மதுரையில் ராஜாஜி மருத்துவமனை தஞ்சை அரசு மருத்துவமனை கோவை அரசு மருத்துவமனை ஆகிய இடங்களில "டயாலிசிஸ்" கருவிகளும் டயாலிசிஸ் பிரிவுகளும்உள்ளனசெங்கற்பட்டுநெல்லை மருத்துவமனைகளில் இப்போது அமைக்கப்படும்,

பிறகுமாவட்ட வாரியாக அமைக்கப்படும் என்றுகழக உறுப்பினர் பி என். ராமசந்திரன் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் அண்டே சட்டசபையில் தெரிவித்தார்.



# கைத்தறித்துணி ஏற்றுமதிக்காக திருப்பூரில் விமான நிலையம்

### அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கோரிக்கை

சென்னை, மே 12— திருப்பூரில் இருந்து கோடிக் கணக்கான ரூபாய்க்கு கைத்தறி நிட்டிங் துணிகள் ஏற்றுமதியாவதால் அங்கு சரக்கு விமானநிலையம் அமைக்க வேண்டும் என அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கேட்டுக் கொண்டுள்ளார்.

32-வது கைத்தறி இருவார விழாவின் நிறைவு நாளும் ஏற்றுமதியாளர்களுக்கு பரிசு வழங்கு விழாவும் 25 ஆண்டுக்காலம் சங்கங்களின் தலைவராக பணி புரிந்தவர்களுக்கு பரிசு வழங்கு விழாவும் நடைபெற்றது.

சென்னை 'பாந்தியன் சாலையில் நடைபெற்ற இவ்விழாவிற்கு அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் தலைமை வகித்தார்.

மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் விழாவில் கலந்து கொண்டு பரிசுகளை வழங்கி சிறப்புரை ஆற்றினார்.

கோ-ஆப்டெக்ஸ் தனி அலுவலர், ஜெயந்தி அனைவரையும் வரவேற்றார் அனகாபுத்தூர் சி. இராமலிங்கம் எம். எல். சி. கைத்தறித்துறை இயக்குநர் ஆர். ஆறுமுகம், ஏற்றுமதியாளர்கள் சங்கத் தலைவர் பாலபாஸ்கர் ஆகியோர் பேசினார்கள்.

மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் பேசும் போது தமிழக அரசு கைத்தறித் நெசவாளர்களுக்கு பல நன்மைகள் செய்து வருகிறது சமூகப் பாதுகாப்பு சேமிப்பு திட்டம் மற்றும் நெசவாளர் இறந்தால் ரூபாய் 10 ஆயிரம் வழங்கும் திட்டம் ஆகியவற்றை நிறைவேற்றும் தமிழக அரசை பாராட்டுகிறேன் என்றார்.

### அமைச்சர் சுவாமிநாதன்

அமைச்சர் வி.வி சுவாமிநாதன் பேசும்போது குறிப்பிட்டதாவது:-

கைத்தறி ஒரு புராதனக் கலை ஆகும், இசைக்கலை, கட்டிடக்கலைபோன்றுஇது பாதுகாக்கப்பட வேண்டிய ஒன்று பண்டைக்கால அரசர்கள் கலைஞர்களை அழைத்து போற்றிபாராட்டிப் பாதுகாத்தது போல- மத்திய மாநில அரசுகள். கைத்தறித் துறையை காப்பாற்றினால் தான் முடியும்.

வாடிக்கையாளர்களைப் பொறுத்தவரை தள்ளுபடி நாட்களை எதிர்பார்க்கிறார்கள். திருமணத் தேவைக்கான சேலையைக் கூட தள்ளுபடி காலம் எப்பொழுது வரும்என்று காத்திருந்து வாங்குகிறார்கள். தாங்கள் வாங்கும் எந்தப் பொருளுக்கும் தள்ளுபடி செய்து வாங்குவதில்தான் மக்கள் மனநிறைவு கொள்கிறார்கள் ஆகவே மத்தியஅரசுமுன்பு போல் ரிபேட் காலத்தை 60 நாட்களாக உயர்த்த வேண்டும். அதே போல் மொத்தக் கொள்முதலில் தள்ளுபடி 50சதவீதத்தையும் ஏற்றுக்கொள்ளவேண்டும்,

விசைத்தறி இப்போது கைத்தறிக்குப் போட்டியாக வளர்ந்து வருகிறது. விசைத்தறி அமைக்க ரூபாய் 15 ஆயிரம் முதல் 20 ஆயிரம் வரை ஆகிறது. இதைசிறுதொழில் பட்டியலில் சேர்க்கமத்திய அரசு சட்டம் கொண்டுவர வேண்டும்.

இந்தியாவிலிருந்துஏற்றுமதி செய்யப்படும் கைத்தறி துணிகள் 75 சதவீதம் தமிழகத்தில் இருந்துதான் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அதுவும் சென்னை விமான நிலையத்தில் இருந்துதான் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அந்த ஏற்றுமதி செய்யும் துணிகளை முதல் தர விமான நிலையமாகும் சென்னை விமான நிலையத்தில் லோடிங்செய்வதற்கு ஏற்ற லோஸ் லோடா, போர்க்ஸ்டம் போன்ற கருவிகள் இல்லை

திருப்பூரில் இருந்து நிட்டிங் துணிகள் ஆண்டு ஒன்றுக்கு 60 கோடிக்கு ஏற்றுமதியாகின்றன. அங்கே ஒரு சரக்குஏற்றும விமான நிலையம் அமைத்தால் மிகவும் வசதியாக இருக்கும் மத்திய அரசு அங்கே ஒரு சரக்கு விமான நிலையத்தை தொடங்க வேண்டும்.

விசைத்தறிகளை அனுமதி இல்லாமல 1000 பேர் நடத்தி வருகிறார்கள்.

அவர்களுக்குஅபராதமாக 1000ரூபாய் விதித்தால் 10 கோடி ரூபாய் வருமானம வரும் நாம் சேட்கும் தள்ளுபடி தொகை 18 அல்லது 20 கோடியாகத்தான் இருக்கும். இது ஒரு பெரிய தொகை அலல. இப்படி வசூல் செய்தே ஈடுகட்டி விடலாம் ஆகவே மத்திய அரசு தள்ளுபடித் தொகையை உயர்த்தித்தர வேண்டும்

### ரூ 40 கோடி விற்பனை

இருவார விழாவில் கைத்தறிதுணி விற்பனை ரூபாய 40கோடியை தாண்டியிருக்கும் கைத்தறித் துணியின் தேக்கம் ரூபாய் 71கோடியாக உள்ளது. இவ்வாறு அமைச்சர் வி வி சுவாமிநாதன் பேசினார்.

பரிசு பெற்றவர்கள் விவரம்:

பிரதம சங்கத் தலைவர்கள் என். எஸ் வைத்தியலிங்கம், பாளையம் சொசைட்டி தென்னாற்காடு மாவட்டம். வி. கே. சுந்தரராஜ் காந்திஜி கைத்தறி சொசைட்டி பரமக்குடி ஏற்றுமதியாளர்கள, ஆல்இந்தியா ஹேண்ட்லும் பேப்ரிக்ஸ் மார்க்கட்டிங் கோ. ஆபரேடிவ் கொசைட்டி. ஹேண்டி கிராப்டஸ் கைத்தறி ஏற்றுமதியாள காாப்ப ரேசன் லிமிடெட் சென்னை ராகி எக்ஸ்போர்ட் சென்னை- ஜனதா டெக்ஸ் டைல்ஸ், மதுரை ஆர்த்தி எக்ஸ்போர்ட் ஹனிபா டெக்ஸ்டைல்ஸ் சென்னை வி. கோவிந்த முதலியார்சன்ஸ் சென்னை ஏ. சுவாமிநாத முதலியார் சன்ஸ் மதுரை ஆகியோர் பரிசுகள் பெற்றனர் கே. வி இராமலிங்கம் நன்றி கூறினார்.





# நெய்வேலி மூன்றாவது சுரங்கத்துக்கு அனுமதி: கழக எம்.பி. கோரிக்கை

புதுடெல்லி, மே 12— நெய்வேலி மூனறாவது நிலக்கரி சுரங்கத்துக்கு உடனடியாக அனுமதி வழங்கவேண்டுமென்று நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஏ. சி சண்முகம் கோரிக்கை விடுத்தார்.

நாடாளுமன்றத்தில் 1986ம் ஆண்டுக்கான நிலக்கரி சுரங்கத் தொழிலாளர்கள் நலஉதவி சட்டத்தின் மீது ஏ சி,சண்முகம் பேசியதாவது:

நிலக்கரிச் சுரங்கங்கள் 1973ம் ஆண்டு தேசிய மயமாக்கப்பட்டு 13 மூன்று ஆண்டுகள் ஆகியும் அந்தத் தொழிலாளர்களின் நலன் மேம்பாடு அடையவில்லை. அடிப்படைப் பாதுகாப்பு கூட நிலக்கரிச் சுரங்கங்களில் செய்யப்படவில்லை என்பது ஏகோபித்த ஒரு உண்மை நிலக்கரி சுரங்கங்களின் தொழிலாளர்கள் இன்னும் வளர்ச்சியடையாத நிலையில வாழ்க்கை வசதிகள் இல்லாத நிலையிலேயே சுரங்க பொந்துகளில் வாழ்ந்து கொண்டு காலத்தை கடத்திக் கொண்டு இருக்கிறார்கள்,

நாடாளுமன்ற மதிப்பீட்டுக்குழு கூட தற்போது பொது நிறுவனங்களில உள்ள நிலக்கரிச் சுரங்கங்களின் நிலைமை பற்றி ஒரு அறிக்கை சமர்ப்பித்துள்ளது, நீங்கள் உபரி வரியை மட்டும் நீக்கினால் போதாது உபரி வரியையும் உதவித் தொகையையும் நீக்குவதினால் என்ன லாபம்? இதற்கு என்ன விளக்கமென்பது தெரியவில்லை.

### வீடு கட்ட கடனுதவி

நிலக்கரி சுரங்கத் தொழிலாளர்கட்கு வீடு கட்டிக் கொள்ள குறைந்த வட்டியில் கடனை நிலக்கரிக் கழகம் கொடுக்க முன்வர வேண்டும். ஆயுள்காப்பீட்டு கழகம வீட்டுவசதி வளர்ச்சிக்கழகம் நிலக்கரிச்சுரங்கத் தொழிலாளர்களின் வீட்டு வசதி சங்கத்தை வளர்ச்சியடையசெய்து அதற்கான வழி வகைகளை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்

தமிழகததில் நெய்வேலியின் மூன்றாவது நிலக்கரிச் சுரங்கத்திற்கான அனுமதியை மத்திய அரசு உடனடியாக கொடுக்கவேண்டும். தமிழக முதல்வர் அவர்களும் வலியுறுத்தி உள்ளார்கள். மேலும இயந்திரங்கள் பழுதடைந்துள்ள காரணத்தால் தொழிலாளர்களின் உழைப்பிற் கேற்ப உற்பத்தியை நாம் அடைய முடிவதில்லை. எனவே இதனை மத்திய அரசும். அமைச்சரும் கவனத்தில் கொண்டுபழுதடைந்துள்ள இயந்திரங்களை மாற்றி புதிய நவீன மாக்கப்பட்ட இயந்திரங்கள் அமைக்க வழிவகை செய்ய வேண்டும்

நிலக்கரியைச்சுத்தப்படுத்தும் இயந்திரங்களை நவீனப்படுத்தி நிலக்கரியின் சாம்பல் சதவீதத்தைக் குறைக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் நிலக்கரியைத் தொடர்ந்து எரிப்பதால் நிலக்கரியின் தரம் குறைந்துகாணப்படுகிறது. நிலக்கரி சுரங்கங்களில் தேங்கி கிடப்பதால் ஆண்டு ஒன்றுக்கு 100 கோடி ரூபாய் நிலக்கரி எரிந்து சாம்பலாகிறது. அப்படி எரிந்து சாம்பலாவதை தடுக்க அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

### பாதுகாப்பு

நிலக்கரியை கருப்பு தங்கம் என்று சொல்வார்கள்'எனவே இதன் தரத்தை பாதுகாக்க அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் உற்பத்தி ஆகும் நிலக்கரித் மதிப்பதை குறைத்து உடனடியாக அதனை வெளியேற்றிநிலக்கரிச் சுரங்கத்தின் தொழிலாளர்களின் சுமையைக் குறைக்கவேண்டும.

7 இலட்சம்நிலக்கரிச்சுரங்கத் தொழிலாளர்கள் வாழும் பகுதிகளில் நடக்கும் சமூக விரோதச் செயல்களை அடக்கி அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டும்,

இவ்வாறு ஏ.சி.சண்முகம் பேசினார்.

# பத்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட எலும்புக் கூடுகள் கண்டுபிடிப்பு

பிரதாப்கர் மே 12— அலகாபாத் அருகிலுள்ள பிரதாப்கா அருகே வாரி கோலா என்ற இடத்தில் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முறபட்ட மனித எலும்புக் கூடுகளை ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்துள்ளனர்.

அலகாபாத் பல்கலைக் கழகத்தை சேர்ந்த தொல்பொருள் ஆய்வு பிரிவினர் பிரதாப்கர் அருகேயுள்ள மக்தானா வாரிகோலா ஆகிய இடங்களில் தொல் பொருள் ஆய்வை மேற்கொண்டுள்ளனர்.

இந்த ஆய்வின் போது வாரி கோலா என்ற இடத்தில் 10 ஆயிரம்ஆண்டுகளுக்கு முற்பட்ட எலும்புக் கூடுகள் கிடைத்தன. அவைகளை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து வருகின்றனா.

இந்தப் பகுதிகளில் வரலாற்று காலத்திற்கு முந்திய கற்கால மனிதர்கள் வாழ்ந்ததாக தெரிகிறது. அவர்களைப் பற்றி அறிய இப்போது கிடைத்திருக்கும் எலும்புக் கூடுகள் உதவிகரமாக இருக்குமென்றுதெரிகிறது.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson Manickam Road MADRAS-29.